உ

சிவமயம்

ஸ்ரீ கொப்புடையம்மன் துணை





# காவடிச் சிந்து

பாவாக்கம்

**கவிஞர் மு.நா. நாராயணன்**

காரைக்குடி

உ

சிவமயம்

ஸ்ரீ பொய்சொல்லா மெய்யர் துணை



**KR.SP. கண்ணன்**

ஜவஹர் தெரு,

காரைக்குடி.



30-4



# குன்றக்குடியான் காவடிச் சிந்து

## துதி

திருவுற்றிலகு குன்றை நகரில் துதிமுழங்கித்
தினம் மொய்த் திடும்அடியர் வாழவே-பல
விதமுற்றிடு நலங்கள் சூழவே வளர்

சேவலாம் கொடி தாங்கியேவெகு ஆவலாய் மயில் தாங்கவே வரு
சிவசுப்ர மண்யகந்த நாதனை, வை
பவ முற்றிலங்கு செய்ய பாதனை

கருவுற்றனை வயிற்றில் பொறையில் சுமந்து உயிர்
கழியப் பிறந்துவந்த நாளிலே-பவம்
அழியக் குகன்இரண்டு தாளிலே-மனம்

கரையவேதுயர் மறையவேதுதி நிறையவே, பணி சிறுவனேனையும்
கருணைக் கரங்கள் கொண்டு தூக்கியே இடர்
களையத் திறங்கள் தந்து ஊக்கியே

மருவுற்றிடு கடம்பின் மணமுற்றிடு திடங்கொள்
வரையொத் திடுபுயங்கள் தாங்கவே மனக்
குறையற் றிலகிதங்கள் ஓங்கவே நெஞ்சின்

மாசும்ஓடவண் மாயைஓடபண் பேசுமாத்தமிழ் வீசியே கவி
மகிமைப் புகழின் சிந்து பாடவே ஐயன்
அருமைக் கனிவுவந்து கூடவே

செறிவுற் றுளம்விரிந்து அறிவுற்றிடச் சிறந்து
திறலுற்றிட நினைந்து நாடியே பக்தி
தெளியக் கிரியில்வந்து கூடியே உயர்

தேவர் நாடது ஈந்தகுஞ்சரி வேடர்காடது சூழ்ந்த மஞ்சரி
சேரவிளங்கும் அருட் கோலமே துதி
கூறிப் பெறுவோம் அனுகூலமே.







# குன்றக்குடியான் காவடிச் சிந்து

## முதல் சிந்து

நண்ணும்புகழ்க் குமரேசன் காரை
　　நாராயணன் பணி யீசன் – நாளும்
நலமேசெயும் பணியேநினை வணிகேசரின் குலமேதொழும்
　　நாதன்–மலர்ப் பாதன்

குன்றக்குடி வளர் சீலன் – வளம்
　　கொட்டும் பிரான்! சிவ பாலன்–அருட்
குவையேதரு சிவயோகமும் பவமேதவிர் தவயோகமும்
　　கொடுப்பான் – பகை முடிப்பான்.

சின்னஞ் சிறியதோர் குன்றம்–மதி
　　சேரும் தமிழ்வளர் மன்றம்–மணம்
செறிமாமலர் நெறிசோலைகள் திரையோசை செய் புனல்வாவிகள்
　　சிறக்கும் கவின் இறைக்கும்.

புள்ளி மயில்கள்வந் தாடும் – போந்த
　　புள்ளினம் நல்லிசை பாடும்–இறை
பூசைப் பிர காசச்சுடர் மாசற்றொளி வீசும் இடர்
　　போக்கும் – நம்மைக் காக்கும்.

வேதஒலிகளின் முழக்கம்–இங்கு
　　விண்ணவர் நாடெனத் தழைக்கும்　　வளை
வேயின்குழல் தோயும்இசை பாயும்!துயர் ஓயும்படி
　　விளங்கும்–நகர் துலங்கும்.

அயனைச் சிறைதனில் வைத்தே – மறை
　　அரனும் உணர உரைத்தே – குகன்
அமராவதி இமையோர்தொழ சமராடிய யமசூரரை
　　அழித்தான் – புகழ் திளைத்தான்

போரிலே வெற்றிமுரசு கொட்டிப்
　　பொருதவன் வென்றிடப் பரிசு – விண்
புலமாள்பவன் குலமாமகள் இளமாங்கனித் தளிர்மேனியை
　　இணைத்தான் – அள்ளி அணைத்தான்.

30-4



வேட்டுவ மங்கையை நாடி - வன
வேடனாய் மானினைத் தேடி - இருள்
விரிகானிடைப் பரிவோடுறு குறமாமகள் தருதேனினை
விழைந்தான் - தினை அளைந்தான்.

பூசத் திருநாள்உற் சாகம் - பக்தி
பொங்கிடும் இன்பப்பிர வாகம் - ஐயன்
புகழ்மேவியே திகழ்வாயிலில் மிகவேவரு தகவோர்இசை
பொலியும் - கலி நலியும்.

காவடி கள்களி ஆட்டம் - புகழ்க்
கட்டியம் கூறக்கொண் டாட்டம் - பயம்
கரையத்துயர் மறையப்பணி வுறையச்சுகம் நிறையப்பொலி
காட்சி - வேலன் மாட்சி.

தருமம் வளர்தன வணிகர் - அண்ணல்
தாள்களிலே வந்து பணிவர் - அவர்
தரமேபெறும் அறமே, வளர் திறமே, கொடை உரமே தினம்
தழைக்கும் - புவி பிழைக்கும்.

அரண்மனைப் பொங்கலார் ஐயா - அருள்
ஆடியார் கண்டனூர் ஐயா - குன்றின்
அறுமாமுகன் உருவாய்வர, தருபூதியின் வரமே கொளத்
தாவும் - ஜனம் யாவும்.





# குன்றக்குடியான் காவடிச் சிந்து

## இரண்டாம் சிந்து

மின்னுமொளி வண்ணமயில் தன்னிலேறி, சொன்னவடி
வேல்துலங்க வந்த வள்ளி நேயனே – ரவி
போல்விளங்கு செய்யசுடர்க் காயனே–கரு.
மேகமாய்,பெரு நாகமாய்,மிக வேகமாய் வரு கோப சூரனை
வெல்லுரங்கொள் வல்லவரைத் தோளனே– ஒளி
வீசிடும்பொற் செங்கமலத் தாளனே

தேகம் இற்று ஓய்ந்த போதும் சீவனற்றுச் சாய்ந்த போதும்–உன்
திருவடி நிழலில் நின்று பாடவே – வளர்
அருளொழுகு காட்சிகண்டு ஆடவே–வெகு
திறம்பெறும்பல வரம்பெறுதிருக் கரந்தனில் உறு நிரந்தரம் பெறச்
செய்யவேண்டும் பன்னிரண்டு கையனே– கவி
நெய்யும் நாரா யணனைஆளும் ஐயனே.



# குன்றக்குடியான் காவடிச் சிந்து

## மூன்றாம் சிந்து

குன்றக்குடி தவழ் ஐயனே! எங்கள்
குலத்தினைக் காக்கும்சுப் பையனே சுகம்
கொடுத்திடும் பன்னிரு கையனே, கொடைக்
குணமேகொளும் மனமேநிறை இனமாம்தன வணிகேசரின்
கூட்டம் தழைத்திடச் செய்குவாய்-வளம்
கொட்டும் முகிலெனப் பெய்குவாய்.

செய்யும் தொழில்களில் உன்னையே – பங்கு
சேர்த்து மகிழ்ந்து செம்பொன்னையே – தந்து
செய்யும் திருப்பணி தன்னையே – மிகச்
செறிவாய்அதி விரைவாய் வெகுதரமாகவே நிறைவேற்றிட
செம்பொற் றிருக்கரத் தாசியே-தினம்
சேர்ந்திடுவாய் நகை வீசியே.

நல்ல வளம்மிக்க சிந்தனை கொண்டு
நாடித் துதித்துனை வந்தனை-தினம்
நாங்கள் செயத்தமிழ் தந்தனை-மது
நலமாந்தளிக் குலமேறிய பலமாமலர் மலைமார்பிடை
நாத! கொணர்ந்தங்கு சூட்டுவோம்-வினை
நல்கும் துயர்களைந் தோட்டுவோம்.

தீயபகைவரை நீக்குவாய்-அவர்
செய்யும் கொடுமைகள் போக்குவாய் எங்கள்
சிந்தைதனைத் தெளிவாக்குவாய் – சுவைத்
திருவாரமு திருமாதர்கள் தரவேகொளும் பர! பார்வதி
செய்ய கரத்தில்வை பாலனே துயர்
தீரப் பணிந்தனம் வேலனே.



# குன்றக்குடியான் காவடிச் சிந்து

## நான்காம் சிந்து

எண்ணம்தனில் நிறை ஈசன் குமரேசன்
அன்பர்நேசன் என்றும்
இன்பப் பரிமள வாசன் வரும்
இடரானது தொடராமலே வடிவேல்கொடு சுடராம் அருள்
ஈந்து மகிழ்ந்திடப் பார்ப்பான் நம்மை
இனியவழி கொண்டு சேர்ப்பான்.

குன்றம் பிளந்திடு தீரன் அயில் வீரன்
உப காரன் அதி
கோமள மேய் அலங்காரன்–இரு
குலமாதர்கள் வலமோடிட புறமேவிய மலையான்–வள்
குன்றை நகர் நின்ற கோலம் கண்டு
கூப்புவோம் கைகளை நாளும்

அன்னை உமையவள் பாலன் தவ சீலன்
வடிவேலன்–என்றும்
அசுரர் குலம்கொளும் காலன்–அவன்
அழகார்மயில் பரிமேல்வலம் உலகோர்தொழ எழிலாய் வரு
ஆனந்தச் சண்முக நாதன் மறை
யான்அந்த மில்குண போதன்

நற்றன வணிகர்நன் றோங்க புகழ் தாங்க
பகை நீங்க திரு
நாட்டில் அறம்தினம் வீங்க–பாடும்
நாராயணன் சீர்பாடலைத் தாராய்க் கொளும் கூர்வேலனை
நாளும் பணிந்துயர்ந்துய்வோம் மேலும்
நல்ல திருப்பணி செய்வோம்.





# குன்றக்குடியான் காவடிச் சிந்து

## ஐந்தாம் சிந்து

தேனமர் சோலைகுன் றக்குடியான்கழல் சேருவீர்
பயம்தீருவீர்
உயர்ந்தேறுவீர் – நிதம்
சிறுமை நீங்கக்கொடும்
வறுமைநீங்க மகிழ் வூறுவீர்! மகிழ்வூறுவீர்!

நெஞ்சிற் கவலைகள் அஞ்சி அழிந்துநீ றாகுமே
மயல் வேகுமே
மிக வேகமே மயில்
நிர்த்தன் கடைக்கணை
வைத்திடக் காமத்தீ போகுமே
தீ போகுமே.

வஞ்சகம் சூதுபொய் மாச்சர்ய
மாம்இவை மாளுமே
இறை ஆளுமே பல நாளுமே அந்த
வள்ளி மணாளனின் துள்ளிடும் வேல்தொழ
வாழுமே
உயிர்வாழுமே!

ஏவல் சூனியங்கள் பேய் பிரேத பூதங்கள் எஞ்சுமே
தொட அஞ்சுமே
சுகம் விஞ்சுமே குகன்
ஏமத்தில் சாமத்தில் காவலனாய் வரக்
கெஞ்சுமே நமைக் கொஞ்சுமே!

காவடிச் சிந்தில்நா ராயணன் பாநெறி காட்டுமே
ஒளிகூட்டுமே
துன்பம் ஓட்டுமே குறச்
கள்ளி கணவனின் புள்ளிமயில் நலம்
கூட்டுமே வளம் ஊட்டுமே.



# குன்றக்குடியான் காவடிச் சிந்து

## ஆறாம் சிந்து

செந்தமிழ் தளைத்து வளர்காடு – கவி
செப்பு புலவோர்களின் தாய்வீடு-உயர்
செய்ய சண்முகன் உறையும் கோடு.
பலர் தேடு
வளமோடு வளர்
செட்டிமக்கள் வாழும் திருநாடு.

நாடதனின் மத்தியிலோர் குன்று புவி
நாடிவரு குன்றக்குடி யென்று – அதில்
நான்முகனும் கைதொழவே நின்று
போரில் அன்று
சூரை வென்று வரும்
நாயக! நின் தாள்பணிவோம் இன்று

கானலையும் வேடர்குல மாது–அவள்
கண்கள் அகன் றெட்டும்இரு காது குகன்
கண்டவுடனே புரிவாள் வாது
நிறுத்தாது
பொறுக்காது குழல்
கட்டவிழக்கொட்டும் மலர்ப்போது

தேவமகள் குஞ்சரி பெண்ராணி – மலர்ச்
செந்திருநி கர்த்த தளிர் மேனி–அவள்
செங்கழலை எட்டும் கரு வேணி
கலைத்தோணி
காதல் பேணி வேலச்
செல்வனின்முந் வந்தடைவாள் நாணி

இருவரையும் காதல்கொளும் ஈசன் – பரை
ஈஸ்வரியாள் தந்தகதி ரேசன் – விரை
எய்திடு கடம்பணியும் நேசன்
விளைபூசல்
மிகும் ஏசல் நீக்கி
ஏந்திமகிழ் குன்றைநகர் வாசன்.



துள்ளுமயில் ஏறிநகர் வீதி – சுற்றி
தொண்டர்வரம் கொள்ளவரு சோதி-உடன்
தூவிவிடு வாசனை விபூதி
மறையோதி
நுதல் மீதில் விரல்
தொட்டுவிடத் தோன்றும் அனு பூதி.





# குன்றக்குடியான் காவடிச் சிந்து

## ஏழாம் சிந்து

குன்றைமாநகர் சென்றுபார்! உடன்
குறையுமே மனக்கள்ளம் – புகழ்
கூறுமே கவி உள்ளம் – ஐயன்
கொடுக்குமே அருள் வெள்ளம் அந்தக்
கொற்றவைதரும் வெற்றிவேல்குகன்
கோலமே நெஞ்சை அள்ளும்.

ஓதுவார்களின் நாதகீதங்கள்
ஒலிக்குமே தினம்தோறும்–கேட்க
உனக்குளே பக்தி ஊறும்–மிகு
உயர்வுனை வந்து சேரும் சுக
உணர்விலே நிறைந் துயிரிலே கலந்
துறையுமே அன்பின் சாரம்!

வல்லவெல்வினை அல்லல் செய்விதி
மாற்றிடும் அதிகாரன் – பணி
மக்களுக்கே உபகாரன் – மலர்
மாலைசூழ் அலங்காரன் – புள்ளி
மயிலில் ஊர்ந்துகை அயிலை ஏந்துது
வசமெனும் சேவற்காரன்

கந்தவேள், அலைச் செந்திலாதிபன்
கருணைசுவர் கார்த்தி கேயன் – எண்ணிக்
கருதுவார்க் கருள் நேயன் – வள்ளி
காதல் ஏற்றருள் தூயன் – வளக்
காரையம்பதிக் கவிநாராயணன்
கருத்தினில் நில்சகாயன்!

அற்புதஞ்செய்யும் கற்கபம் என
ஆளும் ஐங்கரத் தும்பி – தனக்கு
ஆசை மிக்க நல் தம்பி – அவன்
அடியிணைகள் தஞ்ம நம்பி – தினம்
அமுதுகெஞ்சி,கை தொழுது நிற்க நம்
அவலமே விழும் வெம்பி.



# குன்றக்குடியான் காவடிச் சிந்து

## எட்டாம் சிந்து (கும்மிச்சிந்து)

வேல்முருகா கந்தவேல் முருகா எங்கள்
வேல்முருகா வெற்றிவேல் முருகா
வேல்முருகா கந்தவேல் முருகா எங்கள்
வேல்முருகா வெற்றிவேல்முருகா.

குன்றக்குடி வளர் சண்முகனே! உமை
கொஞ்சி மகிழ்ந்திடும் ஒண்முகனே
என்றைக்கும் எம்துணை யானவனே – கரம்
ஈராறு கொண்டசீர் வானவனே (வேல்)

மஞ்சை நிகர்த்த குழலுடையாள் – தேவ
மாதர்கள் போற்றும் வனப்புடையாள்
குஞ்சரி யாள்மனம் கொண்டவனே – பரங்
குன்றினிலே மணம் கண்டவனே. (வேல்)

ஆனந்தமான தினைப்புனத்தில் – வள்ளி
ஆலோலம் பாடும் கனிவனத்தில்
மானொன்றைத் தேடியே சென்றவனே – அவள்
மையலில் சிக்கியே நின்றவனே. (வேல்)

சுந்தரச் சேவல் கொடிதுலங்க – உனைச்
சுமந்திடும் தோகைமயில் இலங்க
வெந்திறல் கொண்டகை வேல்விளங்க – நிதம்
வீற்றிருப்பாய் கொலு யாம் வணங்க! (வேல்)

ஞானப்பழமென நின்றிடுவாய் – புவி
நத்தும் துயர்கள்ளக் கொன்றிடுவாய்
ஈனம் களைந்திடும் சீர்கொடுபப்பாய் நெஞ்சில்
ஈகைவளர்த்திடும் பேர்கொடுப்பாய் (வேல்)

ஆணவம் கோபம் அகற்றிடுவாய் – கொலை
அகந்தையை வென்று தகர்த்திடுவாய்
பேணும் அறங்கள் வள்ரந்திடுவாய் – கலை
பெற்றி பலவும் விளைத்திடுவாய் (வேல்)



கால்நடை யாத்திரை செய்துவரும் எங்கள்
காலகளுக்கே வலு பெற்றிடுவாய்
சாலையிலே பல தர்மம் வளர்த்திடும் உயர்
சற்குணர் வாழஅருள் புரிவாய் (வேல்)

அட்டியின்றிப் பல ஆலயங்கள் – பல்
அறம்துலங்கும் அன்ன சாத்திரங்கள்
கட்டிவைத்த தனவணிகர் குலத்துக்கு
காவலாய் நின்றருள் தந்திடுவாய். (வேல்)

செட்டிமக்கள் குலக் கண்மணியே சீலத்
தேசிக! ஞான சிரோன்மணியே
எட்டுத்திசை சென்ற எங்குலக் கப்பலுக்
கேற்ற துணையாம் எழில்மணியே (வேல்)

ஆராயும் நல்ல அறிவளித்தே – பொருள்
ஆக்கம் கொடுத்து நிறைவளித்தே
நாராய ணன்பாடல் சொல்பவர்க்கே தினம்
நல்லவரங்கள் கொடுத்திடுவாய். (வேல்)

வாழ்க வளமுடன்



கவிஞர் மு.நா. நாராயணன்
காரைக்குடி